ஓம் தத் சத் பரப்பிரஹ்மணே நம:

# ஸ்தோத்திர ரச மஞ்சரியும், தேவாராதி பிற தோத்திரங்களும்.





ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்
வேதாந்த மடம், திருப் பூவணம்.

காப்பிரைட்] 1951. [விலை அணா 4

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 23 | ஸ்வாமிகன் | ஸ்வாமிகள் |
| 14 | 22 | வான | லான |
| 16 | 23 | னிமுவிவே | னிமுலிலே |
| 17 | 12 | புணர்திற | யுணர்திற |
| 18 | 3 | பல்விளைக் | பல்லிளைக் |
| 22 | 18-19 | தாவுசத் சொரூப சுகந்தினை யளித்துச் சுருதிகள் போற்ற விற்றருளி | நீங்குக |
| 24 | 3 | 10 | 1 |
| 28 | 15 | ெறழுது | ெருழுது |
| ,, | 21 | பிரிசு ண்ணுந் | பிரிசு பண்ணுந் |
| ,, | 21 | தின்னுர் | 11 – தின்னுர் |
| 29 | 7 | தொழு தெ்ழு | தொழுதெழு |
| ,, | 26 | அரக்கனீண்முடி | அரக்கனிண்முடி |
| 31 | 9 | யுலாவித தோன்றும் | யுலாவித் தோன்றும் |
| ,, | 21 | பொற்புத தோன்றும் | பொற்புத் தோன்றும் |
| 33 | 11 | தென்னிய | தெள்ளிய |
| ,, | 34 | உரைப்பவற் | உரைப்பவர் |
| 35 | 10 | ஆவண விதிப் | ஆவண லிதிப் |
| ,, | 17 | சென்னவின் | சொன்னவில் |
| ,, | 20 | பிறைதவன் | பிறைதவள் |
| 36 | 19 | வெந்துடகத் | வெந்துட்டகந் |

## பாண்டி சிவ க்ஷேத்திரம் 14.

1. திரு ஆலவாய் (மதுரை) 2. திருப் பூவணம் 3. கானப் பேரூர் (காளையார் கோவில்) 4. திரு ஆடானை (திரு வாடானை) 5. திருப் புத்தூர் 6. திருச் சுழி 7. திரு ஏடகம் 8. திருப் பரங் குன்றம் 9. திருப் புனவாயில் (திருப் புன வாசல்) 10. திரு ஆப்பனூர் (திரு வாப் புடையார் கோவில்) 11. திரு இராமேச்சுவரம் 12. திருக் குற்றாலம் 13. திருக் கொடுங் குன்றம் (பிரான் மலை) 14. திரு நெல்வேலி ஆகப் பாண்டி சிவ க்ஷேத்திரம் 14.

## பாண்டி விஷ்ணு க்ஷேத்திரம் 18.

1. திருக் குருகூர் 2. திருக் குளந்தை (பெருங் குளம்) 3. திருக் குருங் குடி 4. திருக் கூடல் 5. திருக் கோஷ்டியூர் 6. திருக் கோளூர் 7. திருச் சிரி வர மங்கை (நாங்கு னேரி-வான மாமலை) 8. திருத் தண் கால் (சிவ காசி) 9. திருத் தொலை வில்லி மங்கலம் (இரட்டைத் திருப் பதி) 10. திருப் புல்லாணி (தர்ப்ப சயநம்) 11. திருப் புளிங் குடி (புளியங் குடி) 12. திருப் பேரை 13. திரு மால் இருஞ் சோலை (அழகர் கோவில்) 14. திரு மெய்யம் (திரு மயம்) 15. திரு மோகூர் 16. திரு வர குண மங்கை 17. திரு வில்லி புத்தூர் (ஸ்ரீ வில்லி புத்தூர்) 18. திரு வைகுந்தம் (ஸ்ரீ வைகுண்டம்) ஆகப் பாண்டித் திருப் பதி 18.




உ சிவமயம்.

ஓம் தத் சத் பரப் பிரமணே நம:

# ஸ்தோத்திர ரச மஞ்சரி.

இது

மண்டலேசுவரரும், பரசமய கோளரியாரும்,
உபய பாஷா வேதாந்த பிரவர்த்தகாசாரியரும்
நூறு நூல் கிரந்த கர்த்தரும், (நூறு நூல் இயற்றியவரும்,)

திருக் களர்
ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிக ளவர்கள்
மாணுக்கரும்,

திருப் பூவண மட ஸ்தாபகரும் ஆகிய
ஸ்ரீலஸ்ரீ
காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிக ளவர்கள்
இயற்றியது

சிதம்பரம், கோ. சித. மடம்,
ஸ்ரீ சித. நீல கண்ட சுவாமிக ளவர்களால்
பரிசோதிக்கப் பெற்று

மதுரை ஹிந்துஸ்தான் பிரிண்டர்ஸ் பிரசில் பதிப்பிக்கப் பெற்றது.

1951.

ஸ்ரீ சிதம்பரம், கோ. சித. மடம்,

சேங்கத்து, சித. ஸ்ரீ நாராயண சுவாமிகள் இயற்றியது

தேவரு மறையும் வழுத்திடுங் கூடற் றிருத்தல விபூதிநா யகனைப்
பூவண மடத்தி லுறைகண பதியைப் பூவண நாதனைப் பொலிவே
ஓவறத் திகழுஞ் சௌந்தரத் தாயை யுயர்குரு வீரசே கரனைத்
தாவறத் துதித்தான் காசிகா நந்தத் தவமுனி பதிகத்தாற் றழைத்தே

தில்லையி னடநம் புரிபரம் பொருளைச் சிவசிவ காமியை மதுரை
நல்லர சாகும்-மீன்விழி யுமையை நங்குரு வுகந்ததே சிகனைச்
சொல்விரி கழனி முக்திரா மேசத் துரியனைத் துதித்தனன் பொறியை
வெல்லுறு முனிவன் காசிகா நந்தன் மிளிர்பதி கத்தினால் விழைந்தே

கோவிலூர் வாழும் வீரசே கரனுங் குருபர னடிமலர் புனைந்து
பூவணத் திறைவ னருளினாற் பொலியும் பொலிவெனப் பொலிவுறு மடமங்
கோவற வமைத்து வாழ்பவன் கல்வி யுததியா மிவனென விருப்போன்
நாவலன் முனிவன் காசிகா நந்த னருந்துதி பெருந்தக வுடைத்தே.



# புனைந் துரை.

மக்கள் மோக்ஷத்தினை அடைவதற்குக், கர்மம் பக்தி ஞானம் என மூன்று மார்க்கங்கள் உள. அவற்றுள், கர்மமும், ஞானமும், எல்லாராலும் அடையக் கூடிய வல்ல. இக் கலியில் பக்தி ஒன்றே எல்லாராலும் சாதாரண மாக அடையத் தக்கதாம். அதுவும், காயிக வாசிக மாநசிகம் என மூ வகைப்படும். அவற்றுள்ளும், காயிக மாநசிகங்களைப் பார்க்கிலும்,வாசிக பக்தியே மாணிக்க வாசக ஸ்வாமி கள், ஆழ்வார்கள், அருண கிரி நாதர், அபிராமி பட்டர் முதலியோர் செய்திருக்கின்றார்கள். அதனைக் கருதி, திருப் பூவணம், ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள், மதுரை-பொற் றாமரைக் கரை, விபூதிக் கணபதி பேரிலும், திருப் பூவண மடத்தில் வீற்றி ருக்கும்,மகா கணபதி பேரிலும், மதுரை சொக்க நாதர் பேரிலும, மதுரை, மீநாக்ஷி யம்பிகை பேரிலும், திருப் பூவணம்-திருப் பூவண நாதர் பேரிலும், திருப் பூவணம்-ஸௌந்தரிய நாயகி யம்மன் பேரி லும், சிதம்பரம்-நட ராஜர் பேரிலும், பொருள் வைத்த சேரி, ஸ்ரீ உகந்த லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள் பேரிலும், கோவிலூர், ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள் பேரிலும்,திருக் களர், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் பேரிலும், பத்து வகைத் தோத்திரங்கள் செய்திருக்கின்றார்கள். அவற்றில், பக்தி ரசம் நிறைந்திருக்கின்றபடியால், அது "ஸ்தோத்திர ரச மஞ்சரி" எனும் பெயரால் வெளியிடப்படுகின்றது. அன்பர்கள் யாவரும் அதனைப் பார்த்து ஓதி உணர்ந்து இன்புறற்பாலர். மேற்படி ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள், பல நூல்கள், சம்ஸ் கிருதம்-ஹிந்தியி லிருந்து மொழி பெயர்த்தும், தமிழ் நூற்கட்கு உரை யியற்றியும் இருக்கின்றார்கள். அவற்றுள், பல அச்சாகி யிருக்கின்றன. பல அச்சாகிக்கொண் டிருக்கின்றன. விரைவில் வெளிவரும்.

உ சிவ மயம்.
ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

மதுரைப் பொற் ருமரைக் கரையில் வீற்றிருக்கும்

# 1. விபூதிக் கண பதி தோத்திரம்.

மதுரை வாசி

ஆறு முக ஸ்வாமியின் விருப்பிற் கிணங்கச் செய்தது.

1. சீரேறு லகம னைத்தையும் விளக்கிச் சேர்வுற லின்றியே யவற்றுட், பேரேறு றவமர் சீரிய கணேச பீடில்ஞா லத்தினை யகற்றிச், சூரேறி லேகப்பி ரமமா யிருக்கச் சொல்லும்வி பூதியி னுடனே, நீரேய்ம துரைப்பொற் ருமரைக் கரையி னிகழ்கண பதியைவாழ்த் திடுவாம்.

2. திருவளர் கமலத் தயன்முத லாய தேவராய் முத்தொழி னடத்தி, யிருண்மல மிரிய வியாவரு மூன்ற னிணையடி யண்மிய போதே, தருணம தெனவோர்க் தருளிடு கின்றன் றயையினை மநத்தினி லுன்னிப், பொருவரு மதுரைத் தாமரைத் தடத்திற் பூதியார் கணேசநிற் பணிவாம்.

3. சிவனுடைக் குமர! தேசிகத் தலைவன் சிவன்கையின் மாங்கனி கொள்ள, வவனுடைத் தான வவநியைச் சுற்றி யதிவிரைந் தோடியே வருமுன், தவமுடை யுனது யூகபுந் தியினீ தாயையும் பிதாவையுஞ் சுற்றி, நவிலுமக் கனிகொள் தாமரைத் தடத்தி னற்கண பதிநினைத் துதிப்பாம்.

---

1. பேர் ஏறு-புகழ் மிக. சூர் ஏறில்-துன்பம் பொருந்துதல் இல்லாத.

4. வேதநான் கினையும் வேறுவே ருக விரிந்தநல் வியாசராற் செய்த, ஏதமில் லாத பாரத மதனை யிங்குளா ரியாவரு முணர, வோதுறு மொருகோட் டாலதை வரைகின் னுயர்திறன் மநத்தினி லுன்னிச், சீதமார் மதுரைப் பொன்மரைக் கரைவாழ் சிவகண பதிநினைத் துதிப்பாம்.

5. பரவுவார் தமக்குப் பரகதி கொடுக்கப் பாரினிற் றடாகம்வீ திகளில். விரவியே யிருந்து குட்டியே வணக்கம் விருப் பொடு செய்பவர் தங்க, ளூரமுறு பாவ வினைகளை யொழித்து ஞெண்டிரு வடியினிற் சேர்க்க, வரமுறு மதுரைபொற் ருமரைக் கரையில் வாழ்கண பதிநினைத் தொழுவாம்.

6. செக்கர்போன் ஞெளிரு முக்கண்மா மலையாத் திகழு சிந் துரநா யகனுய்த், தக்கவர்க் கருளுந் தன்மையிற் பெரிய தடங்கடற் கருணைநா யகனுய், மிக்கதுட் டரையும் மறக்கரு ணையினல் விரும்பியே யாட்கொளு மிறையாய்ப், பொக்கமில் மதுரைப்பொற் ருமரைக் கரையிற் பொலிகண பதிநினைப் பணிவாம்.

7. சகபதி யருள்பெற் றுயர்குறு முநிவர் தங்கரக் கரகநன் னீரைக், ககபதி விரோதி தாங்குல கொடரிக் கருள்நற் காகமாய்க் கவிழ்த்த, நகபதி குனித்தோன் குமரனுஞ் சாமி நாதற்கு மூத்தநல் வேழ, முகபதி யாம்பொற் ருமரைக் கரைவாழ் முதற்கண பதி நினைத் தொழுவாம்.

8. மதுர்மா யெவரும் புகழ்ந்துவந் தடைய வருபவர் தங்களை மறித்து, *விதுரனென் றுலகோர் துதிப்பதற் குரித்தாய் வின விடல் போலவீ திகளிற், சதுரம தாக நரவுரு வோடு

---

* விதுரன்—திண்ணியன்—அல்லது, அறிஞன்.

தண்கய வுருவினைப் பொருந்தி, மதுரையின் பொற்று மரைத் தடக் கரையில் வாழ்கண பதிநினைப் பணிவாம்.

9. ஒருவரும் வெறுத்த லின்றியே யிருக்கு முலகினைப் பொய்யென வெறுத்துத், திருவருள் பெற்றுச் சிந்தையின் றுயரைத் தீர்த்திட முயல்பவர் தமக்கு, மருவருந் துறவே யுரியதென் றுணர்த்த வல்லப சத்தியை நீக்கிப், பொருவரும் பொற்று மரைக் கரை வதியும் பூதியார் கணேசநிற் பணிவாம்.

10. பவத்தனிப் பரவைக் குரவையை ஞானப் படுவையைக் கொடுகடப் பன்றித், தவத்தனி முயற்சி செய்யினு மதனைத் தாண்டிடல் பிறிதினு லரிதென், சிவத்துயர் மறையின் கருத் தைச்சிஞ் ஞாசு செவ்வனே யுணர்ந்துய வருள்வான், விவத்தறு மதுரைப்பொற் றுமரைக் கரைவாழ் விபூதியார் கணேசநிற் பணிவாம்.

10. விவத்து—ஆபத்து, அல்லது, விபத்து.

---

## 2. திருப் பூவண மடத்தில், சாந்நித்ய மாக விளங்கும் மகா கண பதி பதிகம்.

1. சீர்தந்த வீதி தோறும்வீற் றருளித் திகழன்ப ரருச் சிக்கப் பெற்று, ஆர்தந்த வினிய மோதக மருந்தி யகமகிழ்ந் தடியவர்க் கருள்வான், பார்தந்த கவிகள் புகழ்வைகை காகவும் பார்ப்பவர் மகிழ்வுற மேவும், சேர்தந்த பூவண மடத்துக் கணபதி நின்மல ரடியிணை தொழுவாம்.

---

1. ஆர்—அழகு. பார் தந்த—உலகத் துள்ள. சேர் தந்த—செவ்வை பொருந்திய.

2. தீவண மாகு மிறைவனி னுருவ மெனுங்கவி ஞன்றன் துரைதான், சாவண மாகா திருப்பதற் காகச் சார்ந்துபாண் டியவர் சாதத், தேவணங் காட்டிச் சிவபத மளித்த சிறப்புறு பொழில்நதி சூழும், பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

3. காவல ஞக் குறுப்புக் டோறுங் காப்புடைக் காவல ஞகக், கூவலர் கூவ றமைச்செவிக் கணியாக் கொண்டிடுங் கருணைவா ரிதியாய்க், கேவல மருளிக் கேலமே செய்யுங் கிண்கிணி யொலி களே கிளம்பப், பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

4. தூவண முறுநற் ருமரை யார்க்குந் துகளறு மரிபிர மர்க்குந், தேவணி குருவாய்ச் சிருட்டியா தியசெய் திறலினை முறையினி லுதவிக், கோவண மின்றி யாகுவின் மீது குலவிடுங் கோலம துடனே, பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

5. மாவர சாலா தியதருக் களின்கீழ் வயங்கியே வழிச்செலு மவர்க்கும், ஒவுத வின்றி யெளிதினிற் காட்சி யுவப்புட னளித்தருள் செய்து, மேவிடு பத்தர் மோதக மளிக்க விரும்பிய வருளும்வா ரிதியாய்ப், பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

6. ஆவலஞ் சாலை வீதிமுச் சந்தி யாதிய தலங்களி லுறைந்து, மேவுதா வின்றி யிருக்குநின் பெருமை விளம்பிட

---

4. தூ—வெண்மை, அல்லது, பரிசுத்தம். வணம்—தன்மை. தேவணி—தெய்வத் தன்மை பொருந்திய. 6. தாவு—ஒதுக்கிடம்.

வுரியதோ வெனக்குத், தேவிதே வனுநிற் பணிந்துதற் குற்றத் தீர்விலூ றறப்பெற வருளிப், பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

7. கோவமீ திலக நவமணி குயின்ற கோடிசூ ரியவொளி மானக், கைவளே பொருந்திப் பூடண மணிந்து காவல ருருவநன் கமையச், சேவக மாகத் தாவந்த முதல சீவநந் தாவரம் வாழ்ந்து, பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

8. மூவித வுருப்போற் றேற்றினு நினது முதன்மையுற் றெவர்க்குஞ்செப் பரிதாய், வீவுத லின்றிக் கேவல மாக விளங்கிடு முண்மைரூ பத்தைப், பாவனை செய்யும் பக்குவர்க் கருளிப் பரமநல் வீட்டின்ப மளிப்பான், பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

9. மூவிலே வேலா கியபடை யுடைய முதல்வன்றன் குமாரு மிளேஞன், மாவினி தாய மாங்கனி பெறுவான் மயிலிவர்ந் துலகினேச் சுற்றி, மேவுதன் முன்னர்ப் பிதாவினே மெதுவாய் வலம்வந்தம் மிளிர்கனி கவர்ந்து, பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி தொழுவாம்.

10. சாவண மின்றி யின்பமாய் நிலேக்கச் சற்குரு பாதமே போற்றி, கோவண மின்றி நடநரா யகனுய்க் குலவிடுங் கோலமே போற்றி, ஏவமொன் றின்றி யெவர்க்குமே யருள்வா னிலகிடு மருளுரு வாகிப், பூவண மடத்தில் வாழ்கண பதிநின் புநிததா மரையடி போற்றி.

---

7. கோவம்—பொன். தாவந்தம்—இக்கட்டு, நரகம். சீவநம்—அமுதம், உயிர் வாழ்தல். தாவரம்—இடம், உறுதி.

# 3. திருப் பூவண நாதர் பதிகம்.

1. பொன்வளர் மதுரைப் பாண்டியற் கருள்செய் பொற் றிறன் நினைந்துநைந் துருகி, மன்வள ரன்பால் வழுத்துறு பவர்க்கு மருவுநோய் போக்கிடு மியல்பார், கொன்வளர் பலபூஞ் சோலைகள் சூழ்ந்து கோதற விளங்கிடு தலமாம், புன்மையில் பூவண வைகை யின் கரைவாழ் பூவண்ண நாதனைப் பணிவாம்.

2. ஆவல்கொண் டுன்னை வழுத்தியே பணிந்து மாயிழை யார்களை வெறுத்து, மேவரு ஞான சாதந மடைந்தும் மேன்மையார் குருபர னருளால், ஏவமில் ஞான முற்றுநன் மோக்ஷ மெய்திட வெனக்குநீ யருள்வான், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

3. மேவல ரின்றி யினிதுநான் வாழ மேவல ருளமது களிக்கப், பாவந மாக வென்றுநா னிருக்கப் பாருளோர் விரும் பிட வெவரும், பாவியென் றென்னைப் பகர்ந்திடா திருக்கப் பான்மையெற் கன்புட னளிப்பான், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

4. வாவென வழைத்து வைகைநற் கரையின் மடமொன் றை யியற்றுவா யென்று, ஏவல்செய் தனையா லியானுமவ் வாறே யியற்றின னின்னருள் வாக்கால், மேவிகல் லடியா ரவணிருந்

---

1. பொன் திறன் - அழகிய தன்மை. மன்-வளர்-நிலை பெற்ற-அல்லது, மிகுதியான. கொன்-அழகு (செல்வம்) புன்மை -சிறுமை, இல்-இல்லாத.

3. மேவு அலர்-பொருந்திய விரிந்த. "இருக்க-அப்பான்மை" என்பது, "இருக்கப் பான்மை" என நிலை மொழி யீற் றகரந் தொக்கது.

தாங்ம விசாரஞ்செய் திடவருள் செய்வான், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

5. சேவக மின்றிப் பாவக மாகச் செல்வமும் வித்தையும் பெற்றுத், தேவனு முன்சீர் நூல்பல வியற்றிச் சேர்ந்தபத் தர்கட்கவை சாற்றி, வீவிலா வுன்றன் சொரூபமே யெய்தி விளங்கிட வெற்குநன் கருள்வான், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

6. நாவலர் போற்ற நற்றமிழ் மொழியில் நல்லுரை களைச் செவ்வே யாற்றிப், பாவந மாகுந் தேவபா ஷையினூல் பலவற்றைத் தென்மொழிப் படுத்தி, மேவிந்தி நூல்கள் தமிழ்வச நத்து மிளிர்வுறச் செயவெனக் கருள்வான், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

7. நாவலர் புலவர் பாவல ரவையில் நல்லசொற் பொழிவு செய் திறனே, ஏவரும் புகழ வெனக்கருள் செய்வா னேத்து பொன் னனையினன் 'மனையின், மேவல்செய் யிரச வாதியாய்த் துலங்கி விக்கிர கத்தினை யளித்துப், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

8. பாவமே லீட்டாற் றீமைசெய் பவர்க்குப் பல்துய ரளித் தவர்த் தடுத்து, மேவநல் வழியுய்த் தின்பருள் நின்றன் மேன்மையா ரறிவரிவ் வுலகில், ஏவர்க்கு மரிதா முயர்முத்தி யெனக்கிங் கெளிதினி லருள்செய வேண்டிப், பூவண மதனில் வைகயின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

9. நோவறத் தாயில் பன்றிக்குட் டிகட்கு நூவல்கரு ணையிற்றுய்ப் பன்றி, மேவுருக் கொடுபால் நன்களித் தருளி

---

5. பாவகம் - தூய்மை. 6. பாவநம் - பரிசுத்தம்.

மிளிர்கரிக் குருவிநா ரைகட்கும், ஓவறப் பந்த மொளிருப தேச மோதினே யெனக்குமின் றருள்வாய், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நாதநிற் பணிவாம்.

10. கூவிளந் தளிர்கைக் கொண்டுநற் பூசை நினக்குச்செய் பவர்க்குநற் றுறக்கங், காவிதி யரைப்போற் கொடுக்குநின் கலந்தை காண்பவ ரெவர்தர ணியிலே, பாவியே னுன்னைப் பணிவது கண்டும் பராமுக மாயிரா தருள்வான், பூவண மதனில் வைகையின் கரைவாழ் பூவண்ண நா்தனிற் பணிவாம்.

---

## 4. திருப் பூவணம் - சௌந்தரிய நாயகி பதிகம்.

1. பொன்பயில் பதங்கள் வாழ்த்திநின் பத்தர் புரிதரு பதங்கள்முன் பெற்றார், மன்பயில் வுறுநற் பதங்களை வேண்டி மற்றுனை நினைந்தவ ரடைந்தார், துன்பயில் வில்லா வின்பினைக் கொடுத்துத் தூவுயி ரளித்தெனைக் காப்பான், மின்பயில் பூவ ணச் சௌந் தரித்தாய் விளங்குநின் னடிதிநம் பணிவாம்.

2. பாவநீ மின்றிச் சீவநஞ் செய்தல் பாழ்நர கடைவிக்கு மென்னுக், தேவனல் வாக்கா மருமறைப் பொருளைத் தெளிய வெற் குணர்த்திநன் னெறியுய்த், தாவியைக் கவ்ருங் கூற்றுரு வண்ண மனையினு மினியைநீ யருள்வான், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

3. மேவல ரின்றி யாவரு முறவாய் மிளிரவுந் தக்கநூ லுணர்மே, தாவிக ளோடு சாத்திர மாய்ந்துந் தகுவன வுலகி

---

10. காவிதியர் - மந்திரிமார் - அல்லது, காவிதி என்னும் பட்டம் பெற்ற வேளாளர். கலந்தை - பெருமை.

1. பொன் பயில் - அழகு பொருந்திய. மன் பயில் - நிலைபெறுதல் பொருந்திய. தூ - பரிசுத்தம். மின் - ஒளி.

னர்க் குரைத்து, மேவரும் போற்றிப் புகழ்ந்துகொண் டாட விருக்குநல் வரமெனக் கருள்வான், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

4. நாவலர் போற்று நற்கண பதியை நலந்தரு மாறுமா முகனை, ஆவலா யுலகர் வணங்கிநன் குய்ய வருளினு லீந்தனை காழி, மேவுசம் பந்தற் களித்தனு நப்பால் மிளிர்தயை கொண்டெனக் கருள்வான், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

5. தேவதே வனுநிற் சேர்ந்ததன் மையினுற் றிகழ்சர்வ சத்திமா னுனன், ஈவில குறினே வொருசிறி தசைவு நிகழ்த்த வுந் திறனில னுவன், எவர்நின் பெருமை யறிந்துய வல்லா ரெளிய னின் னிறையருள் வேண்டிப், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

6. நாவினுல் வருஞ்சொற் குற்றமு மெண்ண நலமற வரு மொரு பிழையும், மேவுடல் கொடுசெய் தீவினை யோடு விளங்குபார் வையில்வரு கின்ற, பாவமா தியவா யுளபிழை யனைத்தும் பரிவுடன் பொறுத்தருள் செய்வான், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

7. தாவுறு பிரியாப் பிரியங்க ளற்றுத் தகுஞ்செய லனைத் துமே யொழிந்து, மேவுறு நினைப்பு மறப்புக ளின்றி விளங்குநிர்ச் சிந்தனுய்த் தனியே, ஒவற விருந்துன் னுநந்தத் தழுந்த வுளமகிழ்ந் தருள்செய வேண்டிப், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

8. வீவுதல் வருங்கால் விடயத்தை விழையும் விருப்பினை விடுத்துநன் ருகத், தேவியா முனையே சிந்தைசெய் திருக்கத் தீரவீ ரேசனும் விளங்க, நாவினுல் நானே பிரமமென் றுரைக்க நல்வரந் தந்தருள் புரிவான், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

9. நோவுதான் வந்து றணக்குற வுடலை நுவலுதஞ் செயலறப் பொறிகள், சீவனுஞ் செய்த லரிதெனத் திகைத்துச் சிந்தையா குலமுறுந் தருணங், கூவல்செய் தென்னைக் குணநிதிக் கடவுள் கூடவே யிருக்குமா றருள்வான், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

10. மூவிலை வேலும் மான்மழு வுரியும் முடிதனிற் கங்கை யுந் தரித்த, தேவன தருவிற் பாதியைப் பெற்ற தேவியே யுயிர்விடும் போது, நோவுற வின்றி யசஞ்சல மாக நுவலுநின் னயிக்கிய மருள்வான், பூவணத் துறைசௌந் தரியநா யகிநின் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

---

## 5. மதுரை மீநாக்ஷி யம்பிகை பதிகம்.

1. பூவணி கொள்ளும் பாண்டியற் கருளும் புநிதராய் வைகை மண் போட்ட, பாவணி பலகொள் சொக்கநா தரினற் பாகத்தில் வீற்றிருந் தாட்சி, கோவணி கொடுசெய் குறிப்பறிந் தடைந்தேன் கொடியனைக் கடைக்கண்பார்த் தருள்வாய், மாவணங் கினைச்செய் மயக்கறுத் தருளு மதுரைமீ நாட்சி யம்பிகையே.

2. ஆவல்செய் தென்ற னுக்கையுள் ளளவுன் னடியரன் பினைப்பெறு வதற்குப், பாவியேன் பணிகள் செய்துநின் பெருமைப் பத்தர்கள் பகர்ந்திடக் கேட்டு, நாவினுல் வழுத்தி மநத்தினு னினைந்து நாடொறும் புரியுமா றருள்வாய், மாவடுப் போன்ற கண்களை யுடைய மதுரைமீ நாட்சியம் பிகையே.

3. தேனினு மினிய சொல்லினைப் பெற்றுத் தெங்கங்காய் போற்றந முடையார், மேனிகண் டுழலென் விழிமந மெல்லா மேன்மைபெற் றன்றிரு வடியில், மானினம் போல மயங்கியே யிருக்கும் வரமொன்றை யெனக்குநீ யருள்வாய், மானினம் போன்ற செயல்வழி யுடைய மதுரைமீ நாட்சியம் பிகையே.

4. ஊன்கவ ரன்றி லாதியா முயிர்கட் குவப்புட னருளினை யதனல், ஊனையோம் புதலை விடுத்துனை யடைந்தே னுண்மையைத் தருதலோ டமையா, தூநமா ருடம்பை யினிப்பெறு திருக்கு முபாய மொன் றெனக்குநீ தருவாய், மான்மழு சூலப் படையினன் மனைவி மதுரைமீ நாட்சியம் பிகையே.

5. ஆய்தரு புகழார் தில்லையம் பலவ ரடிகளை யநுதிக மிறைஞ்சி, வாயுறப் புகழ மநநனி நினைக்க வரமொன்றென் றனக்குநீ தருவாய், காயொடு கனியுங் கருதியெந் நாளுங் கனன்றிவண் டிரீதரீஇக் கதித்து, மாய்வுறு பவரை மாய்வற வைக்கும் மதுரைமீ நாடசியம் பிகையே.

6. அறம்பொரு ளின்பம் வீடெனு நான்கு மடைவுட னடைவதற் கான, திறம்படு முடம்பைச் செய்தநற் றவத்தாற் சேர்ந்துநன் முயல்விலா வென்னைப், புறம்புள வாசைத் தளைகளைப் போக்கிப் போதமுண் டாவதற் கருள்வாய்; மறஞ்செயு மவர்க்கும் வரந்தந்து காக்கும் மதுரைமீ நாட்சியம் பிகையே.

7. சென்மமீ துயர்ந்த கருமத்தா வான திறமறி வதற்குணர் விறையு, மின்மையின் விலங்கை யொத்தனன் மிகவு மேற்றமா முடலினைப் பெற்று, நன்னல மடைய முயன்றிலேன் முயல நங்கைய ரமுதென மயக்கும், மன்மத பாணந் தொலைவதற் கருள்வாய் மதுரைமீ நாட்சியம் பிகையே.

8. குதிரைகொண் டிடவன் றடைந்துட லாதி கொடுத் தவன் போற்கொடுப் பவர்க்கும், இதுவுமொன் றெனத்தம் முடல் பொரு ளாதி யீயுமென் றனக்குநன் கருள்வாய், பொதுமையுற் றிவளோர் மானுட ளாகிப் பொலிந்தவன் மனைவியாய் விளங்கி, மதுரைமா நகரின் ஆட்சிகைக் கொடுத்த மதுரைமீ னாட்சியம் பிகையே.

9. புதுமைதான் தாங்கச் சமணரை வென்று பொலிவுடன் றுலங்குசம் பந்தர், சதுர்மறை முடிவின் பொருளினை யுரைக்கத் தந்தனை யருளெனிற் புகழோ, இதுநல்ல தருண மென்றுனை யடைந்தேற் கீயினன் றேபுக ழாகும், மதுமலர்த் தாம நறவநீர் பாயு மதுரைமீ னாட்சியம் பிகையே.

10. முன்னர்நான் மறைகள் முழங்கிடும் பொருளாய் முத் திறத் தாபமு நீங்க, மன்னிய யானு மறதியைப் பெற்றே மயலுறு திருக்குமா றருள்வாய், செந்நெலுங் கமுகுங் கதலியுந் திகழத் தென்னவர் தலைவியாய்ப் பாண்டி, மன்னர்கள் சூழ வீற்றிருந் தாளு மதுரைமீ னாட்சியம் பிகையே.

---

## 6. மதுரை - சொக்க லிங்கேசர் பதிகம்.

1. குதுகல மாக வியாவரும் விரும்புங் கோலமா ராலந் தனிலே, சதுர்மறை கூறும் விதிகளிற் பொருந்தித் தரணியோர் போற்றவீற் றருளிப்,புதுமையா வந்து பணிந்திடு மன்பர் போற்றவே யின்பம தளித்து, மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச வளந் தருன் பதத்தினைப் பணிவாம்.

2. சதுர்மறை முடிவைத் தக்கவர்க் கருளுந் தன்மையைக் கேட்டுநான் வந்து, கதுமென வடைந்தேன் கடைக்கணுற் பார்த்துக் கருணைபா லித்தருள் புரிவாய், மதுமலர்க் கடப்பந் தாரணி மார்பும் மாணிக்க மாலையுந் துலங்க, மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச வளங்கொணின் பதத்தினைப் பணிவாம்.

3. இதந்தரு மெனவே யுணர்திற னின்றி யிருக்குநா ளினிமைய தாக, மதந்தனை விளக்கி மாசிலாப் பதத்தை மன்னிவீ டுறைவதற் கருள்வாய், நிதந்திரு விளையா டல்புரிந் தெவர்க்கு நீக்கமில் லாத்தனை யருளி, மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச வளஞ்செய்நின் பதத்தினைப் பணிவாம்.

4. புதுமையா யெவரும் போற்றிவர்ந் தடையப் புதுமையா முமதுரு வதனைப், பதுமைபோ னின்று கண்ணினுற் கண்டு பத்தியாற் றெளிந்துநைந் துருகித், திதம்பெறு பதத்தை யருளுட னளிக்கத் திருவுள மிரங்குதி பெரும, மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச வளந்தருன் பதத்தினைப் பணிவாம்.

5. நிதந்திரு வருளா னின்றனை வணங்கி நீக்கமில் லொருபரம் பொருளாய், இதம்பெற வாறி யிருப்பதற் குரிய யாக்கையை யறத்தினு லெய்திச், சதுர்மறை கூறும் வழிகளிற் சென்று தக்கவ ரொடுமுற வருள்வாய், மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச வளந்தருன் பதத்தினைப் பணிவாம்.

6. குதிரைகொண் டிடவே பெருந்துறை சென்று குழந்தைநன் மகத்தினு னின்னை, மதந்திகழ் குருந்த மரத்தினீ, ழலிவே மாசிலா வன்பர்வந் தடைந்தார், பதமுறு தற்குத் தகுதியற் றிருக்கும் பாவியா மெற்குநீ யருள்வாய், மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச வளந்தருன் பதத்திணைப் பணிவாம்.

7. பொதுவதா யெவர்க்கும் போதமூட் டுதற்குப் பொது வினில் வீற்றிருந் தருளி, மதுமலர்த் தாமந் துலங்கவே நின்று வாவென வன்பரை யழைத்து, இதமுறு பதத்தைச் செவியினிற் கூறு மியல்புகண் டுன்னைவந் தடைந்தே, மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச வளந்தருன் பதத்தினைப் பணிவாம்.

8. மதிநுத னல்லார் பார்வையிற் சிக்கா வகைதனை யடியனேற் கருளி, அதிதியா யிருக்கு மறிவினைத் திகமு மன்பினு லறைந்துநீ காப்பாய், திதிபெறு தெங்கு கதலிசா லிகணற் றீஞ்சு வைப் பொருள்களை யீயும், மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச வளந்தருன் பதத்தினைப் பணிவாம்.

9. விதமதாம் வேத வாகம புராணம் விளங்கவே புணர்திற னுதவி, மதுமலர்க் கழுநீர்த் தாரணி மார்பர் மன்னிநின் றிடும்படி திகழ்வாய், நதிபல வற்று ளுயர்வுட னொளிரு நலநிறை வைகைநன் னதிசூழ், மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச வளந்தருன் பதத்தினைப் பணிவாம்.

10. மதுரமார் மீநாம் பிகையுடன் விளங்கி மகந்தளர் வுறுசம யத்தில், இதம்பெற வுணர்த்தி யெளிமையைப் போக்கி யின்புட னிருக்குமா றருள்வாய், பதம்பெறும் வீதி தோறும்வீற் றருளிப் பத்தர்கள் களிப்புறு தவமாம், மதுரைநன் னகர்வாழ் சொக்கலிங் கேச வளந்தருன் பதத்தினைப் பணிவாம்.

## 7. தில்லை நடராஜர் பதிகம்.

1. எல்லையில் பவத்தை யினியுரு வண்ண மெமக்கருள் புரிகுரு பரனைத், தொல்லைமாண் புடைய கைலையை நீத்துத் தரிசற விளங்குவோ னன்பர், நல்லவாக் கியத்தாற் றேரத்திரஞ் செய்து நாடொறு மருள்பெற மிளிருந், தில்லைவாழ் நடரா ஜன்றனற் றூளைத் திகம்பணிக் கிடரொழித் திடுவாம்.

2. இல்லையென் றும லியுநன் மநமு மிருவுல கப்பொருள் வெறுப்பும், பல்வினைக் காட்டிப் பரதவி யாத பான்மையும் பெற்றுநா டோறும், சொல்லினைக் கேட்டுச் சுகமிது வென்னச் சொலுமொழிச் சுந்தரி யோடு, தில்லைவாழ் நடரா ஜன்றனற் ருளைத் திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

3. தொல்லையா முலகைத் தோற்றியே காத்துத் தொலைக் குந்தன் பதமளித் தருள்வான், கல்லைநற் றோணி யாய்க்கொண்டு கடந்த கபடமில் பத்தர்க்குப் போலச், சொல்லைநற் றோணி யாய்க் கொண்டு கடக்கத் துணிந்திடு மெமக்கருள் புரியத், தில்லைவாழ் நடரா ஜன்றனற் ருளைத் திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

4. தொல்லைமுக் குறுணி விநாயக னடியைச் சுந்தரி யம்பிகை யடியை, எல்லையில் வள்ளி தெய்வயா னையினோ டிணைபிரி யாதஷண் முகனை, அல்லலில் லாம லயர்ந்திடு மரியி னடிகளை நினைக்குமா றருளத், தில்லைவாழ் நடரா ஜன்றனற் ருளைத் திநம் பணிந் திடரொழித் திடுவாம்.

5. கல்வினை நிகர்க்கு மநந்திந மவன்றன் கஞ்சநன் மலரடி நினைக்க, வில்வினை யொத்த புருவமார் மாதர் மேல்விழி செவாதவை நோக்க,நல்லவா மவற்றின் குணங்களை யென்று நாநனி மொழிதரத் திருவார், தில்லைவாழ் நடரா ஜன்றனற் ருளைத் திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

6. எல்லைதா னின்றி யிருக்குமோர் பெருமை யெளியரா லுணரவொண் ணாது, தில்லைப்பா லருந்து முநிவர்கள் காண்பர் கிருந்திய தன்சொரு பத்தைத், தொல்லையா முடலை நாளெ னீக்கித் தோன்றவே கண்டினி திருக்கத், தில்லைவாழ் நடரா ஜன்றனற் ருளைத் திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

7. கல்வினை வில்லாய் வளைத்தனான் றவனைக் கண்டடி பணிந்துள மாயின், வில்லினை யென்மேல் விட்டுவல் வினையை விதையின்றி மரிக்கச்செய் திருப்பான், இல்லினைக் கடந்து முன் வரா திருந்தே யின்றெனைக் காத்தருள் புரியத், தில்லைவாழ் நடரா ஜன்றனற் றாளைத் திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

8. அல்லுமெற் பகலு மிடைவிடா தொளிரு மாநமரு பத்தினை நாடிக், கல்லினை யுறழு மநத்தினைக் கசக்கிக் காமநீத் தடியவர் நாளுஞ், சொல்லரும் பரமாத் துவிதஞா நத்தைச் சுருதி சொல் வழியினு லடையத், தில்லைவாழ் நடரா ஜன்றனற் றாளைத் திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

9. கல்வினு லாய கயத்தினை யிக்கைக் கடிக்குமா றருள் செய்து முன்னம், சொல்லினு லாய பாவினைக் குற்றஞ் சொன்னவர் துன்பநோ யுற்றுர், அல்லினும் பகலு மிடையறத் தனவா மடியிணை யரற்றுமியாஞ் சுகிக்கத், தில்லைவாழ் நடரா ஜன்றனற் றாளைத் திநம் பணிந் திடரொழித் திடுவாம்.

10. பல்லினை யிறுக்கிச் சொல்லினைச் சொல்லாப் பரவுல கடையுநாட் டன்றன், சொல்லினைச் செவியாற் கேட்டுயா மிருக்கச் சொரூபமேல் மநமுறத் துலங்கி, வில்லினை யொத்த புருவம துடைய வியன்பெண்டிர் விருப்பிலா திருக்கத், தில்லைவாழ் நடரா ஜன்றனற் றாளைத் திநம்பணிந் திடரொழித் திடுவாம்.

---

8. சிக்கல்—பொருள் வைத்த சேரி,

## ஸ்ரீ உகந்த லிங்க ஞாந தேசிகர் பதிகம்.

1- தெருளினைப் பொருந்த நித்தியப் பொருளுந் தெளிவிலா வநித்தியப் பொருளு, மருளடு மோட்ச விருப்பமு மிகத்தின் வைராக்ய சம்பத்தி முதனுன், கருளொடு வைராக் கியம்பத்தி ஞாந மாகிய நான்குமோ ருருவாய்ப், பொருள்வைகன் னகர்வா ழுகந்தலிங் கேசன் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

2. இருளினைப் போக்கிப் பொருளினைத் திகழ்த்து மிரவிபோற் பொருளினை மறைக்கும், இருளினைப் போக்கி ஞானத்தை யீந்தே யின்பரு பத்தினை விளக்கி,அருளினைப் பெறுமா ணவர்க்குழுக் காய மகற்றியே வீட்டினை யருளப்,பொருள்வைநன் னகர்வா ழுகந்தலிங் கேசன் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

3. மருளினைப் பொருந்தி மாநுட வாக்கை மருவியு மயலினைப் போக்காப், பொருளினைப் பொருந்திப் புலான்மய வுடலிற் பெழுதினைக் கழிக்குமென் றனக்கு,அருளினை யீந்தே யகங்கா நீங்கி யாநமரு பத்தினை யடையப், பொருள்வைநன் னகர்வா ழுகந்தலிங் கேசன் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

4. இருண்மய மாகு மாயைவந் தென்னை யீர்த்திடா திருக்குமா றருளித், தெருள்விழி யோர்கள் பார்வையிற் பட்டுச் செயல்களை விலகிடச் செய்து, உருண்மந மொழிய வுண்மையை யுணர்த்தி யுயரடித் தாமரை யீயப், பொருள்வைநன் னகர்வா ழுகந்தலிங் கேசன் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

5. பொருளலாப் பொருளைப் பொருளென மருண்டு பொய்புக லுலகத்தி லிருந்தே, அருளற மின்பம் வீடெனு நான்கு மடைவதற் காசைமீக் கூறல், இருளினைக் கொண்டு வொளியினைக் காண விச்சைவைக் குதல்சம மெனச்சொல், பொருள்வைநன் னகர்வா ழுகந்தலிங் கேசன் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

6. பொருளறத் துறந்து பிச்சையேற் றருந்தும் பூரணச் சாதந மிலதேல், அருளினை யடையா தவத்திலே திரிவா யாசையைப் போக்குமா றறியாய், தெருளினைப் பெற்ற சாதுசங் கத்தாற் றெளிகுவை யெனப்புகல் குணமார், பொருள்வைநன் னகர்வா ழுகந்தலிங் கேசன் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

7. உருவினைப் பெற்று முருவினு லுறும்பய னுண்மையா யுளவிலை யானுன், மருளினைப் பெற்று மறுமுறை பிறந்தான் மாநுட வாக்கையே வருமோ, கிருகம் தடையக் கிருகரன் கிருபை கிடைக்கினு மின்றெனி விலையென், பொருள்வைநன் னகர்வா ழுகந்தலிங் கேசன் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

கிருகரன் - சிவன்.

8. செருகல்செய் யாது பொறிகளைப் போற்றித் திநகரன் போலவே விளங்கிச், சருவக மடக்கிச் சருவணம் பேசாத் தன்மை யைச் சாருமா றருளப், பொருந்தல ரின்றிப் பொருந்தர்வாழ் புலங்கள் பொலிவுறு மாண்பினை யுடைய, பொருள்வைநன் னகர்வா ழுகந்தலிங் கேசன் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

செருகல் - கெர்வம், சருவகம் - மநம், சருவணம் - வாய், பொருந்தலர் – பகைவர், பொருந்தர்—நெய்வோர்.

9. மருளர்கள் கூறும் மாண்பிலா மொழியை மதித்துமே நாளினைக் கழித்தேன். இருளர்க ளின்றி யிருக்குநற் றேச மெங்குள தெனத்திரிந் தலைந்தேன், அருளர்கள் கூறக் கேட்டுநா னடைந்தே னன்பினு லாளுதற் காகப்; பொருள்வைநன் னகர்வா ழுகந்தலிங் கேசன் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

10. அருளுடை யோர்க ளருளிலை யென்றே யன்பினு லறைந்தனர் பொய்யைத், தெருளுடை யவனே வத்தையுங் கேட்டுச் செப்பருங் கைலையி லிருந்தான், மருளுடை யானே மருளனென் றுண்மை வாசகங் கூறவே வந்து, பொருள்வைநன் னகர்வா ழுகந்த லிங் கேசன் பொன்னடி களைத்திநம் பணிவாம்.

---

## 9. கோவி லூர் மடம்,

## ஸ்ரீ முக்தி ராம லிங்க ஞாந தேசிகர் பதிகம்.

1. பாவலர் கூறும் பஞ்சகோ சத்தின் பான்மையைப் பகுத்துநன் குணர, ஆவலில் லாம லிருக்கினு மருளா லாக்கையை

வெ,ரியினா ணீக்கி, நாவினால் வழுத்தா முத்தியை யெனக்கு நலகியே பவந்தனைத் துடைக்கக், கோவிலூர் வாழு முத்திரா மலிங்கக் குருபரன் றனைத்திநம் பணிவாம்.

2. எவரும் விரும்பும் நான்மறை யேத்து மெண்ணருங் கரும்நற் பத்தி, தாவரு ஞான மடைந்துய்வா னருளச் சற்குரு மூர்த்தியாய் விளங்கி, நாவில்வாழ் மாது தவனுமா யிலக்கும் நற்றவ னுமைகொழு நனுமாய்க், கோவிலூர் வாழு முத்திரா மலிங்கக் குருபரன் றனைத்திநம் பணிவாம்.

3. மூவிரு சமய மாகிய மார்க்க முத்தியை யடைவிக் கா தென்று, நாவினா லுரைத்து நல்லதி காரி நன்மையை நாடியே சடமாம், ஆவனல் லாக்கை யனைத்துநீத் தென்ற னுந்மரு பத்தினை யருளக், கோவிலூர் வாழு முத்திரா மலிங்கக் குருபரன் றனைத்திநம் பணிவாம்.

4. பூவில்வாழ் மாது கணவன்ற் கீதை புகலுந்ற் சொரூ பத்தை யுணர, மேவுசா தநநான் கமைவரப் பெற்ற மேன்சேர் மநமுடை யவர்க்குத், தூவுசத் சொரூப சுகத்தினை யளித்துச் சுருதிகள் போற்றவீற் றிருந்து, தூவுசத் சொரூப சுகத்தினை யளித்துச் சுருதிகள் போற்றவீற் றிருந்து, கோவிலூர் வாழு முத்திரா மலிங்கக் குருபரன் றனைத்திநம் பணிவாம்.

5. பாவிக டமது பாவத்தைப் பாறிப் பற்றினைப் பதைப்பறப் போக்கி, நாவினால் வழுத்த யோக்கிதை செய்த நன்மையை நினைந் துனைந் துருகித், தேவிதே வனுமாய் வன்னிமா முகனாய்ச் செவ்விய வேலுடை யவனாய்க், கோவிலூர் வாழு முத்திரா மலிங்கக் குருபரன் றனைத்திநம் பணிவாம்.

6. பூவில்வாழ் சீவர் போற்றவீற் றிருந்து புநிதரைப் பாவநீக் குதற்கு, ஆவியோ டாக்கை தநமிகப் பெற்றே யரியமா வாக்கிய

மருளி, வீவரும் ஞாந மடைந்தன்பு பெறவே வியன்குரு வாகவீற் றிருக்குங், கோவிலூர் வாழு முத்திரா மலிங்கக் குருபரன் றனைத்தி நம் பணிவாம்.

7. ஒவரும் பரமாத் துவிதஞா நத்தை யுண்மையாய்ப் பெற விருப் புடைய, தாவரு மதிகா ரிகளினைக் காணிற் றத்துவ மசிமுதற் பொருளை, ஏவமில் லாம லியம்புவான் கருதி யெழில்மிகு மாக்கை யைத் தாங்கிக், கோவிலூர் வாழு முத்திரா மலிங்கக் குருபரன் றனைத்திநம் பணிவாம்.

8. பாவிகள் செய்த பாவத்தைப் போக்கிப் பாரினிற் றடாகம்வீ திகளிற், கூவியே யழைக்க விருக்குநற் குணமார் குணேசநற் றயையினைப் பொருந்தி, நாவினி லூறைக்க நல்லுப தேச நவிலவே கருணையா லெழுந்து, கோவிலூர் வாழு முத்திரா மலிங்கக் குருபரன் றனைத்திநம் பணிவாம்.

9. மூவர்கள் போற்ற முதன்மறை புகழ முனிவர்கள் கூட்டமே முழங்கத், தேவர்க டிகழ்த் திருக்கரத் திலங்குந் திரளுறு நெல்லியின் பழம்போற், சீவர்க ளுண்மைச் சொரூபத்தைப் பெற்றுச் சித்துரு வாகவே யிருக்கக், கோவிலூர் வாழு முத்திரா மலிங்கக் குருபரன் றனைத்திநம் பணிவாம்.

10. ஆவிய மின்றி யாவலிப் புற்றே யாயிழை யார்களை விரும்பாக், காவிநல் லாடை தனைத்திந மணிந்து கருவில்வா ராவகை யருள, ஒவுத லின்றி யோவியம் போல வொளிருந்தன் னருளினைக் காணக், கோவிலூர் வாழு முத்திரா மலிங்கக் குருபரன் றனைத்திநம் பணிவாம்.

---

10. ஆவியம்—உயிர், சரீர பலம், ஆவலிப்பு ஆசை.

## 10. திருக் களர்-ஸ்ரீவீர சேகர ஞாந தேசிகர் பதிகம்.

10. சீர்கொண்ட நின்று மரைமலர்ப் பதத்தைச் சேர்ந்தனர் முன்னம்வந் தநேகர், கார்கொண்டிங் கவர்கள் விழைந்தன வெல்லா நன்களித் தின்பம தளித்தாய், கார்கொண்ட வெனைபு மோர்பொரு ளாவெணிக் காத்தருள் செய்திருக் களர்வாழ், பேர்கொண்ட வீர ஞாநதே சிகநின் பிறங்கடி யிணைத்திநம் பணிவாம்.

1. கார் - அன்பு. கார் - அறிவு - மயக்கம்.

2. உளர்விலா வுள்ளத் தமர்ந்திடு முண்மை யுணர்சக்தியிலெற்குவெம் விடமார்,களத்தன்றன் மனைவி கங்கைநன் மதியைக் கழற்றியே துறவியாய் வந்து,கிளர்மிகு வேத வாக்கியப் பொருளைக் கேட்டுய வருள்வடி வதிருக், களரில்வாழ் வீர ஞாநதே சிகநின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

3. குளிர்முதற் படைக ளின்றியஞ் ஞாநக் கொடுமையைக் கெடுப்பதற் குவந்த, நளிரிணைப் பார்த்தோர் மிகவியந் திடவே நானெனு முடவின்மோ கத்தை, எளிதிலே யொழிய நீக்கிநின் னருளா லேத்துதற் பதமளித் ததிருக், களரில்வாழ் வீர ஞாநதே சிகநின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

4. அளிமலர் விட்டுவிட் டாய்ந்துநன் மதுவுண் டகமகிழ்ந் திருப்பதே போலத், தளமிகு நறுந்தா ரணிந்தமார் புடனே தரணியி லருளொடு வந்து, களிதரு மன்பு கைவரப் பெற்ற கண்டரைக் கடவுள ராக்கிக், களரில்வாழ் வீர ஞாநதே சிகநின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

5. வளர்பந்த நீக்க வந்திடு பவர்க்கு வழங்குது கருணையால் ஞாநங், கிளர்தர மறைமா வாக்கியப் பொருளைக் கிளத்திநன்

2. உளர்வு இலா - அசைவிலா. 3. குளிர்-மழு. நளிர்-பெருமை.

கன்னவர்க் குரிய, தளைகளைப் போக்கிச் சச்சிதா நந்தத் தன்றனிச் சொரூபமாக் குதிருக், களரில்வாழ் வீர ஞானதே சிகனின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

6. விளர்பரு வத்தான் விவேகமில் லாது விடயத்தில் விடனைப்போற் றிரிந்து, தளர்வினைப் பொருந்திச் சாதநம் பெற்றுச் சாதுசங் கத்தினைச் சாராக், களவினைச் சார்ந்து கனி விலென் மநதைக் கனியினுங் கனிவுறுத் துதிருக், களரில்வாழ் வீர ஞானதே சிகனின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

விளர்—இளமை. களவு-வஞ்சகம்.

7. தளர்வுறும் பருவத் தைம்பொறி களுந்தஞ் சத்தியற் றிருக்கும்போழ் தியானும், உளர்தலில் லாம லுன்னையே நாளு முளத்தினி னினைக்குமா றருள்வான், பளகறு பத்தர் றின்சா ணடைந்து வேண்டுவ வருள்வதற் குத்திருக், களரில்வாழ் வீர ஞானதே சிகனின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

8. பிளவிலா வேதப் பொருளினை யெவர்க்கும் பிழையற விளம்புதல் கருதிக், கொளலரும் பொருளைக் கரதலா மலகக் கனியெனக் கொடுக்கக்கொண் டருளால், தளர்விலா வறுப வாநந்த முற்றவென் றன்மையா ரறிவரிங் குதிருக், களரில்வாழ் வீர ஞானதே சிகனின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

9. வளமைசெய் வதுபோற் கநவினின் வந்து வழுக்கிலா "நற்கவி புனைக", "அளவிலா நூற்க ளாக்குக" வென்றுன் னுஞ்ஞையை யெளியனுக் கிட்டாய், களவிலா துன்றண் ணருளி னைக் கொண்டு கணக்கில்நூ லியற்றினன் சீரார், களரில்வாழ் வீர ஞாதே சிகனின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

10. களகமூர்த் தேகுங் கணபதி யென்கோ கலாபியூர்த் தேகுவோ னென்கோ, இளவந முவண மழவிடை முறையி னேறியூர்ந் திடுபவ னென்கோ, களபமார் தேவி யென்னுகோ நினைநேர் காணுமா றருள்புரி வாய்சீர்க், களரில்வாழ் வீர ஞாநதே சிகனின் கழலிணை யிணைத்திநம் பணிவாம்.

### தனிப் பாசுரம்.

1. அளவிலா வன்ப ரன்புடன் வந்து மாற்றியே போற்றிநின் றிறைஞ்சப், பளகறு பத்தர் தமைநல்ல வழியிற் பயிலுமா றருள்தரு மிறையாய்க், கிளர்தரு தெங்கு சாலியே யாதி கிளர்பொழில் சோலைசூ ழுதிருக், களர்வளர் வீர ஞானதே சிகநின் கழலிணை யினைத்திநம் பணிவாம்.

2. மாசிலா மணியே கருணைவா ரிதியே மறுவிலா வாக் கினுற் றுதிப்பார்க், காசிலா முத்தி யன்புட னளிப்போ யன்பினு னின்றனை யடைந்தேன், றூசிலா தென்னற் சொரூபம தளித்துச் சுத்தமெய்ஞ் ஞானியாக் குதிருக், காசிலாக் களர்வாழ் வீரசே கானற் கழலினைக் கருத்தினில் வைப்பாம்.

3. விளக்கமில்லா நாற்கால்போற் றிரிந்த வென்னை
விரும்பியழைத் தருகிருத்தி விநயத் தாலே,
விளக்கமுற மதிகொடுத்துப் போத மூட்டி
விசுத்தபரப் பிரமமதாய்த் துலங்க வைத்து,
உளப்ப லொன்று மில்லாதே யிருக்கச் செய்த
வுன்பெருமை தனைத்திநமு நினைக்கச் செய்வான்,
அளப்பறுசீர் வீரசே கரஞான தேசிகநின்
னடியிணைக ளநவரத மநுசந் திப்பேன்.

4. மாணிக்க வாசகனின் வாசகத்தைத் தான்கேட்ட
வண்செவியா மேலுலகம் புகுதலை நான்கண்டு,
நாணிக்கை கூப்பியுன்ற னற்சீர்கள் கேட்டு
நன்மையுறக் கரவொடுகீழ் நாடுறுமென் மநதைக்,
காணிக்கை யாத்தத்தங் கரஜலத்தாற் கொடுத்தேன்-
கவினியநின் னருள்கொடாது மேனேக்கக் கருதாய்,
தோணிக்கொப் பவிருக்கநீ துன்னுகருக் கடலைத்
துணைவேறு தாண்டுதற்குத் தேடுவதொன் றுண்டே.

உ சிவமயம்.

## பூவணம்

# ஸ்ரீ ஞாந சம்பந்த ஸ்வாமிகள்.

## பண் தக்கேசி.

1. அறையார் புனலு மாமலரு மாடர வார்சடைமேற்,
குறையார்மதியஞ்சூடி மாதோர் கூறுடை யானிடமா,
முறையார் முடிசேர் தென்னர் சேரர் சோழர்க டாம்வணங்கு,
திறையா ரொளிசேர் செம்மையோங்கு தென்றிருப் பூவணமே.

2. மருவார் மதின்மூன் றொன்ற வெய்து மாமலை யான்மடந்தை,
யொருபால் பாக மாகச் செய்த வும்பர் பிரானவனூர்,
கருவார் சாலியாலை மல்கிக் கழன்மன்னர் காத்தளித்த,
திருவார் மலிந்த சேடர் வாழுந் தென்றிருப் பூவணமே.

3. போரார் மதமா வுரிவை போர்த்துப் பொடியணி மேனியனுங்,
காரார் கடலி னஞ்ச முண்ட கண்ணுதல் விண்ணவனூர்,
பாரார் வைகைப் புனல்வாய் பரப்பிப் பன்மணி பொன்
கொழித்துச்,
சீரார் வாரி சேர நின்ற தென்றிருப் பூவணமே.

4. கடியா ரலங்கற் கொன்றை சூடிக் காதிலொர் வார்குழையன்,
கொடியார் வெள்ளை யேறு கந்த கோவண வன்னிடமாம்,
படியார் கூடி நீடி யோங்கு பல்புக ழாற்பரவச்,
செடியார் வைகை சூழ நின்ற தென்றிருப் பூவணமே.

5. கூரார் வாளி சிலையிற் கோத்துக் கொடிமதில் கூட்டழித்த,
போரார் வில்லி மெல்லிய லாளோர் பான்மகிழ்ந்தா னிடமா,
மாரா வன்பிற் றென்னர் சேரர் சோழர்கள் போற்றிசைப்பத்,
தேரார் வீதி மாட நீடு தென்றிருப் பூவணமே.

6. நன்று தீதென் றொன்றி லாத நான்மறை யோன்கழலே,
சென்று பேணி யேத்த நின்ற தேவர் பிரானிடமாங்,
குன்றி லொன்றி யோங்க மல்கு குளிர்பொழில் சூழ்மலர்மேற்,
றென்ற லொன்றி முன்றி லாருந் தென்றிருப் பூவணமே.

7. பைவா யரவ மரையிற் சாத்திப் பாரிடம் போற்றிசைப்ப,
மெய்வாய் மேனி நீறு பூசி யேறுகந் தானிடமாங்,
கைவாழ் வளையார் மைந்த ரோடுங் கல்வியி னெருங்கிச்,
செய்வார் தொழிலின் பாட லோவாத் தென்றிருப் பூவணமே.

8. மாட வீதி மன்னி லங்கை மன்னனை மாண்பழித்துக்,
கூட வென்றி வாள்கொ டுத்தாள் கொள்கையி னார்க்கிடமாம்,
பாடலோடு மாட லோங்கிப் பன்மணி பொன்கொழித்து,
வோடி நீரால் வைகை சூழு முயர்திருப் பூவணமே.

9. பொய்யா வேத நாவி னானும் பூமகள் காதலனுங்,
கையாற் றொழுது கழல்கள் போற்றக் கனலெரி யானவனூர்,
மையார் பொழிலின் வண்டு பாட வைகை மணிகொழித்துச்,
செய்யார் கமலந் தேன ரும்புந் தென்றிருப் பூவணமே.

10. அலையார் புனலை நீத்த வருந்தே ரருமன் புசெய்யா,
நிலையா வண்ண மாய வைத்த நின்மலன் றன்னிடமா,
மலைபோற் றுன்னி வென்றி யோங்கு மாளிகை சூழ்ந்தயலே,
சிலையார் புரிசை பரிசு ண்ணுந் தென்றிருப் பூவணமே.

திண்ணார் புரிசை மாட மோங்கு தென்றிருப் பூவணத்துப்,
பெண்ணார் மேனி யெம்பி றையைப் பேரிய வின்றமிழா,
னண்ணா ருட்கக் காழி மல்கு ஞானசம் பந்தன்சொன்ன,
பண்ணார் பாடல் பத்தும் வல்லார் பயில்வது வானிடையே.

## பண் - காந்தார பஞ்சமம்.

1. மாதமர் மேனிய னாகி வண்டொடு,
போதமர் பொழிலணி பூவ ணத்துறை,
வேதனை விரவல ராண மூன்றெய்த,
நாதனை யடிதொழ நன்மை யாகுமே.

2. வானணி மதிபுல்கு சென்னி வண்டொடு,
தேனணி பொழிற்றிருப் பூவ ணத்துறை,
யானநல் வருமறை யங்க மோதிய,
ஞானனை யடிதொழ நன்மை யாகுமே.

3. வெந்துய ருறுபிணி வினைக டீர்வதோர்,
புந்தியர் தொழுதொழு பூவ ணத்துறை,
யந்திவெண் பிறையினொ டாறு சூடிய,
நந்தியை யடிதொழ நன்மை யாகுமே.

4. வாசநன் மலர்மலி மார்பில் வெண்பொடிப்,
பூசனைப் பொழிறிகழ் பூவ ணத்துறை,
யீசனை மலர்புனைந் தேத்து வார்வினை,
நாசனை யடிதொழ நன்மை யாகுமே.

5. குருந்தொடு மாதவி கோங்கு மல்லிகை,
பொருந்திய பொழிற்றிருப் பூவ ணத்துறை,
யருந்திற லவுணர்த மரண மூன்றெய்த,
பெருந்தகை யடிதொழப் பீடை யில்லையே.

6. வெறிகமழ் புன்னைபொன் ஞாழல் விம்மிய,
பொறியர வணிபொழிற் பூவ ணத்துறை,
கிறிபடு முடையினன் கேடில் கொள்கையன்,
நறுமல ரடிதொழ நன்மை யாகுமே.

7. பறைமல்கு முழவொடு பாட லாடலன்,
பொறைமல்கு பொழிலணி பூவ ணத்துறை,
மறைமல்கு பாடலன் மாதொர் கூறினன்,
கறைமல்கு கழறொழ வல்ல வில்லையே.

8. வரைதனை யெடுத்தவல் லரக்க னீண்முடி,
விரறனி லடர்த்தவன் வெள்ளை நீற்றினன்,
பொருபுனல் புடையணி பூவ ணந்தனைப்,
பரவிய வடியவர்க் கில்லைப் பாவமே.

9. நீர்மல்கு மலருறை வானு மாலுமாய்ச்,
சீர்மல்கு திருந்தடி சேர கிற்கிலர்,
போர்மல்கு மழுவினன் மேய பூவணை,
மேர்மல்கு மலர்புனைந் தேத்த வின்பமே.

10. மண்டைகொண் டுழிதரு மதியி றோருங்,
குண்டருங் குணம்பல பேசுங் கோலத்தர்,
வண்டமர் வளர்பொழின் மல்கு பூவணங்,
கண்டவரடி தொழு தேத்தல் கன்மமே.

11. புண்ணியர் தொழுதெழு பூவ ணத்துறை,
யண்ணலை யடிதொழு தந்தண் காழியு,
ணண்ணிய வருமறை ஞாந சம்பந்தன்,
பண்ணிய தமிழ்சொலப் பறையும் பாவமே.

## ஸ்ரீ நாவுக் கரசு ஸ்வாமிகள்

### தாண்டகம்.

1. வடிவேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும் வளர்சடைமே விளமதியந் தோன்றுந் தோன்றுங், கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றுங் காதில்வெண் குழைதோடு கலந்து தோன்று, மிடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்று மெழில்திகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும், பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும் பொழில்திகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே.

2. ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்று மடியவர்கட் காரமுத மாகித் தோன்று, மூணாகி யூர்திரிவா னாகித் தோன்று மொற்றை வெண் பிறைதோன்றும் பற்றார் தம்மேற், சேணாக வரைவில்லா லெரித்த தோன்றுஞ் செத்தவர்த மெலும்பினாற் செறியச் செய்த, பூணாண மரைநாணும் பொலிந்து தோன்றும் பொழில்திகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே.

3. கல்லாலி னீழற் கலந்து தோன்றுங் கவின்மறையோர் நால்வர்க்கு நெறிக ளன்று, சொல்லாகச் சொல்லியவா தோன்றுந் தோன்றுஞ் சூழரவு மான்மறியுந் தோன்றுந் தோன்றும், அல்லாத காலனைமுன்

னடர்த்த ரேன்று மைவகையா னிளைவார்பா லமர்ந்து தோன்றும், பொல்லாத புலாலெலும்பு பூணுய்த் தோன்றும் பொழிறிகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே.

4. படைமலிந்த மழுவாளு மானுந் தோன்றும் பன்னிரண்டு கையுடைய பிள்ளை தோன்றும், நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்று நான்மறையி னொலிதோன்று நயனந் தோன்று, முடைமலிந்த கோவணமுங் கீழுந் தோன்று மூரல்வெண் சிரமாலை யுலாவித தோன்றும், புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும் பொழிறிகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே.

5. மயலாகுந் தன்னடியார்க் கருளுந் தோன்று மாசிலாப் புன்சடைமேன் மதியந் தோன்று, மியல்பாக விடுபிச்சை யேற்ற ரேன்று மிருங்கடனஞ் சுண்டிருண்ட கண்டந் தோன்றுங், கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை யாயிரமா முகத்தினொடு வானிற் ரேன்றும், புயல்பாயச் சடைவிரித்த பொற்புத் தோன்றும் பொழிறிகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே.

6. பாராழி வட்டத்தார் பரவி யிட்ட பன்மலரு நறும்புகையும் பரந்து தோன்றுஞ், சீராழித் தாமரையின் மலர்க ளன்ன திருந்தியமா நிறத்தசே வடிக டோன்று, மோராழித் தேருடைய விலங்கை வேந்த னுடறுணித்த விடர்பாவங் கெடுப்பித் தன்று, போராழி முன்னீந்த பொற்புத தோன்றும் பொழிறிகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே.

7. தன்னடியார்க் கருள்புரிந்த தகவு தோன்றுஞ் சதுர்முகனைத் தலையரிந்த தன்மை தோன்று, மின்னனைய நுண்ணிடையாள் பாகந் தோன்றும் வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்த ரேன்றுந், துன்னியசெஞ் சடைமேலோர் புலியும் பாம்புந் தூயமா மதியுடனே வைத்த தோன்றும், பொன்னனைய திருமேனி பொலிந்து தோன்றும் பொழிறிகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே.

8. செறிகழலுந் திருவடியுந் தோன்றுந் தோன்றுந் திரிபுரத்தை யெரிசெய்த சிலையுந் தோன்று, நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்று நெற்றிமேற் கண்டோன்றும் பெற்றந் தோன்று, மறுபிறவி யறுத்தருளும் வகையுந் தோன்று மலைமகளுஞ் சலமகளு மலிந்து தோன்றும், பொறியரவு மிளமதியு மலிந்து தோன்றும் பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

9. அருப்போட்டு முலைமடவாள் பாகந் தோன்று மணிகிளரு முருமென்ன வடர்க்குங் கேழன், மருப்போட்டு மணிவைரக் கோவை தோன்று மணமலிந்த நடந்தோன்று மணியார் வைகைத், திருக்கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றுஞ் செக்கர்வா னொளிமிக்குத் திகழ்ந்த சோதிப், பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும் பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

10. ஆங்கணைந்த சண்டிக்கு மருளி யன்று தன்முடிமே லலர்மாலை யளித்த தோன்றும், பாங்கணைந்து பணிசெய்வார்க் கருளி யன்று பலபிறவி யறுத்தருளும் பரிசுந் தோன்றும், கோங்கணைந்த கூவிளமு மதமத் தம்முங் குழற்கணிந்த கொள்கையொடு கோலந் தோன்றும், பூங்கணைவே ளுருவழித்த பொற்புத் தோன்றும் பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

11. ஆருருவ வுள்குவா ருள்ளத் துள்ளே யவ்வுருவாய் நிற்கின்ற வருளுந் தோன்றும், வாருருவப் பூண்முலைநன் மங்கை தன்னை மகிழ்ந்தொருபால் வைத்துகந்த வடிவுந் தோன்று, நீருருவக் கடலிலங்கை யரக்கர் கோனை நெறுநெறென வடர்த்திட்ட நிலையுந் தோன்றும், போருருவக் கூற்றுதைத்த பொற்புத் தோன்றும் பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

இப் பதிகம் அகத்தியர் தேவாரத் திரட்டி லுள்ளது.

## ஸ்ரீ சுந்தர ஸ்வாமிகள் ப-ண் இந்தளம்

1. திருவுடை யார்திரு மாலய னாலும்,
உருவுடை யாருமை யாளையொர் பாகம்,
பரிவுடை யாரடை வார்வினை தீர்க்கும்,
புரிவுடை யாருறை பூவண மீதோ.

2. எண்ணி யிருந்து கிடந்து நடந்து,
மண்ண லெனுநினை வார்வினை தீர்ப்பார்,
பண்ணிசை யார்மொழி யார்பலர் பாடப்,
புண்ணிய னாருறை பூவண மீதோ.

3. தென்னிய பேய்பல பூதம வற்றொடு,
நள்ளிரு ணட்டம தாடக வின்றோர்,
புள்ளுவ ராகும வர்க்கவர் தாமும்,
புள்ளுவ னாருறை பூவண மீதோ.

4. நிலனுடை மான்மறி கையது தெய்வக்,
கனலுடை மாமழுவேந்தியோர் கையி,
லனலுடை யாரழ கார்திரு சென்னிப்,
புனலுடை யாருறை பூவண மீதோ.

5. நடையுடை நல்லெரு தேறுவர் நல்லார்,
கடைகடை தேர்றிடுமின்பலி யென்பார்,
துடியிடை நன்மட வாளொடு மார்பிற்,
பொடியணி வாருறை பூவண மீதோ.

6. மின்னனை யாடிரு மேனிவி ளங்கவொர்,
தன்னமர் பாகமதாகிய சங்கரன்,
முன்னிணை யார்புர மூன்றெரி யூட்டிய,
பொன்னனை யானுறை பூவண மீதோ.

7. மிக்கிறை யேயவன் றுன்மதி யாய்விட,
நக்கிறை யேவிர லாலிற வூன்றி,
நெக்கிறை யேநினை வார்தனி நெஞ்சம்,
புக்குறைவானுறை பூவண மீதோ. 8—9 இல்லை.

10. சீரின்மி கப்பொலி யுக்திருப் பூவண,
மாரவி ருப்பிட மாவுணர்வானை,
யூரனு ரைத்தசொன் மாலைகள் பத்திவை,
பாரிலு ரைப்பவர் ாவம றப்பரே.

## ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகள்.

1-வது அகவல்

பூவண மதனிற் பொலிந்திருந் தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும்,

4-வது போற்றித் திரு அகவல்

பொருப்பமர் பூவணத் திறைவா போற்றி.

---

## ஸ்ரீ கரு வூர்த் தேவர் திரு இசைப் பா

### பண் - பஞ்சமம்.

1. திருவருள் புரிந்தா ளாண்டுகொண் டிங்ஙன் சிறியனுக் கினியது காட்டிப், பெரிதருள் புரிந்தா னந்தமே தருநின் பெருமையிற் பெரியதொன் றுளதே, மருதர சிருங்கோங் ககின் மாஞ் சாடி வரைவளங் கவர்ந்திழி வைகைப், பொருதிரை மருங்கோங் காவண வீதிப் பூவணங் கோயில்கொண் டாயே.

2. பாம்பணைத் துயின்றோ னயனமுதற் றேவர் பன்னெடுங் காலமுற் காண்பான், எம்பலித் திருக்க வென்னுளம் புகுந்த வெளிமையை யென்று நான் மறக்கேன், றேம்புனற் பொய்கை வாளைவாய் மடுப்பத் தெளிதரு தேறல்பாய்ந் தொழுகும், பூம்பணைச் சோலை யாவண வீதிப் பூவணங் கோயில்கொண் டாயே.

3. கரைகட லொலியிற் றமருகத் தரையிற் கையினிற் கட்டிய கயிற்றோ, விருதலை யொருநா வியங்கவந் தொருநா ளிருந்திடா யெங்கள்கண் முகப்பே, விரிதிகழ் விழவின் பின்செல்வோர் பாடல் வேட்கையின் வீழ்ந்தபோ தவிழ்ந்த, புரிசடை துகுக்கு மாவண வீதிப் பூவணங் கோயில்கொண் டாயே.

4. கண்ணியன் மணியின் குழல்புக் கங்கே கலச்துபுக் கொடுங்கினேற் கங்க, ஹுண்ணியை யெனினு நம்பநின் பெருமை நுண்ணிமை யிறந்தமை யறிவன், மண்ணியன் மாபிற் றங்கிருண் மொழுப்பின் வண்டினம் பாடநின் ருடும், புண்ணிய மகளி ராவண வீதிப் பூவணங் கோயில் கொண் டாயே.

5. கடுவினைப் பாசக் கடல்கடந் தைவர் கள்ளரை மெள்ளவே துரந்து, னடியிணை யிரண்டு மடையுமா றடைந்தே னருள்செய்வா யருள்செயா தொழிவாய், நெடுநிலை மாடத் திரவிருள் கிழிக்க நிலைவிளக் கலகில்சா லேகம், புடைகிடந் திலங்கு மாவண விதிப் பூவணங் கோயில்கொண் டாயே.

6. செம்மனக் கிழவோ ரன்புதா வென்றுன் சேவடி பார்த்திருந் தசல, வெம்மனங் குடிகொண் டிருப்பதற் கியானு மொன்னுடை யடிமைதா னியாதே, யம்மனங் குளிர்நாட் பலிக்கெழுந் தருள வரிவைய ரவிழ்குழற் சுரும்பு, பொம்மென முரலு மாவண வீதிப் பூவணங் கோயில்கொண் டாயே.

7. சொனனவின் முறைநான் காரண முணராச் சூழல்புக் கொளித்தநீ யின்று, கன்னவின் மநத்தென் கண்வலைப் படுமிக் கருணையிற் பெரியதொன் றுளதே, மின்னவில் கனக மாளிகை வாய்தல் விளங்கிளம் பிறைதவன் மாடம், பொன்னவில் புரிசை யாவண வீதிப் பூவணங் கோயில்கொண் டாயே.

8—9 இல்லை.

10. பூவணங் கோயில் கொண்டெனை யாண்ட புனிதனை வனிதைபா கனைவெண், கோவணங் கொண்டு வெண்டலை யேந்துங் குழகனை யழலெலா நிறைந்த, தீவணன் றன்னைச் செழுமறை தெரியுந் திகழ்கரு வூரனே னுரைதத, பாவணத் தமிழ்கள் பத்தும்வல் லார்கள் பரமன துருவமா குவரே.

## ஸ்ரீ அருணகிரி நாதர்-திருப் புகழ் கவி 3.

திருப் பூவனம்.

அறப்பாவை அத்தற் கருள்பாலா-அளித்தாது வெட்சித் திருமார்பா, குறப்பாவை அற்பிற் புணர்வோனே-குலத்தேவ வர்க்கப் பரிபாலா, மறப்பாத கத்துற் றுழல்வேனே-மலர்த்தாள்வ ழுத்தக் கிருபையீவாய், சிறப்பான முத்திக் கொருவாழ்வே-திருப்பூவ ணத்திற்பெ ருமாளே. 101

பந்தப்பொற் பாரப யோதர-முந்தைச்சிற் றுடைசெய் மேகலை-பண்புற்றுத் தாளொடு வீசிய துகிலோடே-பண்டெச்சிற் சேரியில் வீதியில்-கண்டிச்சித் தாரோடு மேவிடு-பங்குக்கைக் காசுகொள் வேசையர் பனிநீர்தோய், கொங்குச்சிப் பூவணி தோகையர்-கந்தக்கைத் தாமரை யாலடி-கும்பிட்டுப் பாடிசை வீணையர் அநு ராகங்-கொண்டுற்றுப் பாயலின் மூழ்கினும்-மண்டிச்சிச் சீயென வானவர்-குன்றப்பொற் பாதக்கு பாநிதி அருள்வாயே, அந்தத்துக் காதியு மாகிய-மந்திக்குட் டானவ னுனவ-னண்டத்தப் பாலுற மாமணி ஒளிவீசும்-அங்கத்தைப் பாவைசெய் தேயுயர்-சங்கத்திற் றேர்தமி ழோதிட-அண்டிக்கிட் டார்கழு வேறினர் ஒருகோடி, சந்தத்திக் காளுநி சாசரர்-வெந்துடகத் தூளிப டாமெழ-சண்டைச் செற்றூர்பட வேவயில் விடுவோனே-தங்கச்சக் ராயுதர் வானவர்-வந்திக்கப் போரு ளேதிகழ் - தம்பப்பொற் பூவண மேவிய பெருமாளே. 956.

வானவ ராதி யோர்சிறை மேவ-மாவலி யேசெய் திடுசூரன்-மார்பிரு கூற தாய்விட வாரி-வாய்விட வேலை விடுதீரா, கானவர் பாவை காதல னுன-காசணி பார தனமார்பா-காலனைமோது காலக பால-காள களேசர் தருபாலா, தேனமர் நீப மாலைவி டாத-சேவக ஞான முதல்வோனே-தீயகு ணுதி பாவிநி னுது-சேவடி காண அருள்வாயே, போனக சாலை யாதுலர் வாழ-வீதிக டோறு நனிமேவு-பூவண மான மாநகர் வாழு நாதகு கேச பெருமாளே 1305.

25. வாசிட்டம் கவி 2055. ரூ. 2—4
26. மகாராஜத் துறவு — மகப் பிரசாதிநி உரை. 2—0
27. கதா சரித் சாகரம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. வசநம். 2—4
28. கைவல்ய நவநீதம் — கவி (288) மூலம் பாக்கட். 0—9

## அச்சாக வேண்டியன.

1. யுக்திப் பிரகாசம். வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு.
2. தர்க்க சங்கிரகம் — தீபிகை உரை. சமஸ்கிருத மொழி பெயர்ப்பு.
3. சப்த பதார்த்தி — தர்க்கம் — வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
4. காணாத சித்தாந்த சந்திரிகை — தர்க்கம் — வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
5. பேத திக்காரம் — சத் கிரியை என்னும் உரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
6. மூர்க்க சதகம் — பத உரை — சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
7. பிரபோத சுதாகரம் — பத உரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
8. கணேச கவசம் — பத உரை — சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
9. கணேச கவசம் தமிழ் கவி — உரை. 10. விவேக சூடாமணி — பத உரை.
11. பக்தி சதகம். பத உரை. பொழிப் புரை.
12. நாகா ஜீவ வாதக் கட்டளை — சத்யார்த்தப் பிரகாசிகை உரை.
13. கீதா சாரத் தாலாட்டு — லகு சந்திரிகை உரை. 14. மேற்படி. குறிப்பு உரை.
15. சசிவந்த போதம் — பதார்த்த பாஸ்கரன் உரை.
16. வேதாந்த சூடாமணி — சந்தோஷ தாயினி உரை.
17. ஸ்திரீ புருஷ ஜநந மரண ரஹஸ்யம். வசநம். 18. சிவ சங்கராவதாரம் — சுலோகம் — வசநம்.
19. பட்டினத்தார் பாடல் — உரை. 20. சமாதி விதி. வசநம். 21. சந்யாச விதி. வசநம்.
22. பகவற் கீதை 15-வது அத்தியாயம் — சம்ஸ்கிருத — பத உரை. தமிழ் கவி உரை.
23. காசிகாநந்த விஜயம். வசநம். 24. சங்கர விஜய விலாசம் — வசநம்.
25. வீர சேகர ஞாந தேசிக சரிதம். கவி 1500. 26. கைவல்ய நவநீதம் — பத சார உரை.
27. சித்தாந்த லேச சார சங்கிரகம் வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு (56 மத விசாரம்).

உ சிவமயம்.

# இராம நாத புரம் ஜில்லா, திருப் பூ வணம் மடம், ஸ்ரீ காசிகா நந்த ஞா நாசார்ய ஸ்வாமிகள் இயற்றிய நூல்கள். பதிப்பித்தன.

| | | |
|---|---|---|
| 1. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா. வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு. ரூ. | 2—8 |
| 2. | விசார சாகரம். வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு. | 2—4 |
| 3. | வியாச தாத்பர்ய நிர்ணயம். வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—8 |
| 4. | வேதாந்த சித்தாந்த முக்தாவலி. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—8 |
| 5. | நைஷ்க்கர்ம்ய சித்தி. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—8 |
| 6. | வேதாந்த பரிபாஷை. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—7 |
| 7. | ஸ்வாராஜ்ய சித்தி. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—4 |
| 8. | வேதாந்த சஞ்ஞா. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—2 |
| 9. | ஹரி மீடே, ஹரி தத்வ முக்தாவலி. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0–12 |
| 10. | ஈசாவாஸ்ய உபநிஷத்—சங்கர பாஷ்யம். வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—4 |
| 11. | மண்டல பிராஹ்மண உபநிஷத்—ராஜ யோக பாஷ்யம். வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—4 |
| 12. | தாந்திரிக த்வைத சைவ கண்டநம். வசநம். (சூட்டுக் கோல் – கட்டாரி – புச்சம்). | 1—0 |
| 13. | பக்தி (வைராக்ய) சதகம். தோத்திரம், பத உரை. | 0—3 |
| 14. | வைராக்ய தீபம். பத உரை. பொழிப் புரை. | 0—8 |
| 15. | சீடாசாரம். பால போதினி உரை 0—8. 16. ஸ்தோத்திர ரச மஞ்சரி கவி 160. | 0—4 |
| 17. | அத்வைதிகட்கும், அதிஷ்டாநத்தி விருப்பவர்கட்கும், ஓர் அறிக்கை. | 0—2 |
| 18. | வட நாட்டில் ஹரித் துவாரக் கும்ப மேளாவும், தென் நாட்டில் சாதுக்கள் மேளாவும் வசநம். | 0—2 |
| 19. | சாது சங்க நிறுவல் விழாக் கூட்ட வைபவம். வசநம். | 0—2 |
| 20. | திருக் களர், வீர சேகர ஞாந தேசிக சரிதம். வசநம். | 1—0 |
| 21. | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி 9 புத்தகம் சேர்ந்தது. | 3—0 |
| 22. | பஞ்ச தசி கவி 0–10. 23. கீதாத் திரயம் (பகவற் கீதை, பிரஹ்ம கீதை, ஈசுவர கீதை) கவி. ரூ. | 1—4 |
| 24. | விவேக சூடாமணி – அஞ்ஞ வதைப் பரணி இரண்டு சேர்ந்தது கவி. | 1—0 |